the Tamil Weekly ' Kalki ' on page 4 of the 31st August 1958 issue under the heading ' ஜில்லா பிரிவினை ' has made a statement which is derogatory to the House.

SRI M. KALYANASUNDARAM : What is the motion, Sir?

MR. SPEAKER : The hon. Member read it just now. On going through this article, I find that one passage which may be construed as wrong is the reference ' சட்டசபை அங்கத்தினர்கள் தங்கள் அக்கிரமச் செல்வாக்கை In my opinion, this does not refer to the conduct of any Member in the Legislative Assembly nor does it refer to any business conducted or to be conducted in the House. The matter pertains only to the activities of Members outside the Legislative Assembly. Though this comment is not in good taste, I do not think that a *prima facie* case has been made out. I therefore rule that no *prima facie* case of breach of privilege has been made out.

### IV.—MOTION UNDER RULE 40 *RE* KALEESWARAR MILLS, COIMBATORE.

MR. SPEAKER : Notice of the following motion under rule 40 of the Assembly Rules has been given by hon. Members, Sri N. Marudachalam and Srimathi Kolandai Ammal :

" தொழிலாளிகளுக்கு மூன்று மாதமாக சம்பளம் கொடுக்கப்படாமல், எவ்வித எச்சரிக்கையுமின்றி சட்ட விரோதமாக மூடப்பட்ட கோவை காளிஸ்வரர் மில்லை சர்க்கார் எடுத்து நடத்துமாறும், கம்போடியா மில் தொழில் தகராறை தீர்த்து வைக்குமாறும். "

SRI N. MARUDACHALAM : கனம் சபாநாயகர் அவர்களே, கோயம்புத்தூரிலுள்ள காளிஸ்வரர் மில்லில் சென்ற மே மாதத்திலிருந்து அங்கே வேலை செய்யும் தொழிலாளிகளுக்கு சம்பளம் கொடுக்கப்படவில்லை. இவ்வாறு சம்பளம் கொடுக்கப்படவில்லை என்ற விஷயம் சம்பந்தப்பட்ட அதிகாரிகளுக்கும் தெரிவிக்கப்பட்டிருக்கிறது. அப்படி தெரிவிக்கப்பட்டிருந்தபோதிலும் கூட, சம்பந்தப்பட்ட அதிகாரிகள் சம்பள பட்டுவாடா சட்டப் பிரகாரம் எந்த விதமான நடவடிக்கையும் எடுக்கவில்லை. மேலும் அந்த மில் முதலாளி ஹைகோர்ட்டு தீர்ப்பு வந்த பிறகும் கூட அதை மீறி யிருக்கிறார். அத்தீர்ப்பை மீறின பிறகும் கூட, அரசாங்கம் அந்த மில் முதலாளி மீது எந்த விதமான நடவடிக்கையும் எடுக்கவில்லை. தவிர, சென்ற மாதம் 10-ம் தேதியன்று, சட்டவிரோதமாக, எந்தவித எச்சரிக்கையும் இல்லாமல் மில் மூடப்பட்டுள்ளது. மில்லை மூடுவதற்கு மூன்று மாதத்திற்கு முன்னால் நோட்டீஸ் கொடுக்கவேண்டும். அவ்வாறு நோட்டீஸ் கொடுக்கப்படவில்லை. மில் மூடிய பிறகும் கூட, தொழிலாளிகள் தங்களுடைய சம்பளத்தைப் பெறுவதற்காக, வெளியே வந்தால் மில் பேல்கள் வெளியே போய்விடும் என்ற காரணத்தினால், உள்ளே இருந்து கொண்டு மில்லைப் பாதுகாத்து, 16-ம் தேதி வரையிலும் மில்லுக்குள்ளேயே இருந்தார்கள். இந்த விவரம் அரசாங்கத்துக்கும் தெரியும். மந்திரிகளுக்கும் தெரிவிக்கப்பட்டிருக்கிறது. அப்படியிருந்தும் அதன் பேரில் எவ்வித நடவடிக்கையும் எடுக்கப்படவில்லை. தீர்ப்பு வந்த பிறகு, மத்திய அரசாங்கத்தின் லேபர் கமிஷனரும், தொழில் சங்கத் தலைவர்களும், அவர்கள் மூன்று பேர்கள் நியமித்தார்களே அவர்களும் சேர்ந்து, ' 2-ம். தேதியன்று சம்பளம் கொடுக்கப்படவேண்டும், 5-ம் தேதியிலிருந்து மில்லை நடத்தவேண்டும்' என்று கையெழுத்திட்டு ஒப்பந்தம் செய்து கொண்டிருக்கிறார்கள். அந்த ஒப்பந்தத்தை மீறினதற்காக எந்தவிதமான

5th September 1958] [Sri N. Marudachalam]

நடவடிக்கையும் எடுத்ததாகத் தெரியவில்லை. உடனடியாக தொழிலாளர்களுக்கு சம்பளம் கொடுப்பதற்காக தக்க நடவடிக்கை எடுப்பதோடு, சட்டத்தை மீறிய மில் முதலாளி மீது நடவடிக்கை எடுக்கவேண்டுமென்றும் கேட்டுக் கொள்கிறேன்.

கம்போடியா மில்லில் இரண்டு மாத காலமாக தகராறு நடந்து கொண்டே இருக்கிறது. கம்போடியா மில் இப்பொழுது மூடப்பட்டிருக்கிறது. மந்திரி அவர்களே இந்த தகராறை கோர்ட்டில் தீர்ப்புக்கு விட்டு விடலாமென்று சொல்லிவிட்டு வந்ததாகத் தெரிகிறது. கோர்ட்டு தீர்ப்பு வருகிற வரையிலும் தொழிலாளரின் வாழ்க்கை நிலைமை என்ன ஆகிறது? அதுவரையிலும் குறைந்தபட்சம் அரைச் சம்பளமாவது கொடுப்பதற்கு அரசாங்கம் உத்திரவிடவேண்டும். கோர்ட்டின் தீர்ப்பு வருவதற்கு 1 அல்லது $1\frac{1}{2}$ வருஷம் ஆகலாம். ஆகவே, அதுவரையிலும் தொழிலாளரின் வாழ்க்கையை பாதுகாப்பது அரசாங்கத்தின் கடமையாகும். மேற்சொன்ன காரணங்களுக்காக காளீஸ்வரர் மில்லை நடத்துவதற்கும், அந்த மில் தொழிலாளிகளுக்கு சம்பளம் கொடுப்பதற்கும், கம்போடியா மில் தொழிலாளிகளுக்கு கோர்ட் நடவடிக்கை முடியும் வரையிலும் சம்பளம் கொடுப்பதற்கும் அரசாங்கம் தக்க நடவடிக்கை எடுக்கவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

**Srimathi KOLANTHAI AMMAL** : கனம் சபா நாயகர் அவர்களே, கோயம்புத்தூர் ஜில்லாவிலே கம்போடியா மில்லில் வேலை நிறுத்தம் காரணமாக கடந்த இரண்டு மாதங்களாக தொழிலாளிகளுக்கு மிகவும் கஷ்டமான நிலைமை ஏற்பட்டிருக்கிறது என்பது அனைவரும் அறிந்ததே. அந்த மில்லிலே வேலை செய்யக்கூடிய 2,700 தொழிலாளிகளும், பொதுவாக கோயம்புத்தூரிலேயே பொருளாதாரத் துறையில் பின்தங்கியவர்கள் என்பது மிகவும் முக்கியமான விஷயம். இரண்டாவதாக மில்லிலே வேலைசெய்கின்ற நிரந்தரத் தொழிலாளிகளை பதலிகளாக வேலைக்கு அமர்த்தவேண்டுமென்ற மில் முதலாளியின் கோரிக்கை மிகவும் பலவந்தமாக இருக்கிறது. மூன்றாவதாக, வேலையிலிருந்து நீக்கப்பட்டிருக்கிற தொழிலாளிகளுக்கு அரசாங்கமானது நஷ்டஈடு கொடுக்க வேண்டுமென்று இருக்கிற தொழில் சட்டத்தை கண்டிப்பாக அமல் நடத்த வேண்டுமென்பது. இந்த மூன்று பிரச்னைகளையும் வலியுறுத்துவதுடன், இந்த மில்களிலே வேலை செய்துவந்தவர்கள் இரண்டு மாத வேலை நிறுத்தம் காரணமாக பண நெருக்கடியால் மிகவும் கஷ்டப்படுகிறார்கள் என்பதையும் எடுத்துக்கூற விரும்புகிறேன். அவர்களுடைய குடும்பங்கள் மிகவும் கஷ்டப்படுகின்றன. அங்கே வேலை செய்கின்ற 2,700 தொழிலாளிகளில் குறைந்தபட்சம் 2,500 தொழிலாளிகள் என்னுடைய தொகுதியிலே உள்ளவர்கள். அது மட்டுமல்ல. ஜனவரி மாதம் முதல் மின்சார வெட்டு வந்ததன் காரணமாக, மாதத்திலே 10 அல்லது 12 நாட்களுக்கு வேலை குறைந்து ஏற்கனவே 4 மாத காலமாக குறைந்த சம்பளத்தை வாங்கி கடனிலே ஆழ்ந்திருக்கிறார்கள். அதைத் தொடர்ந்து வேலை நிறுத்தும் அவர்களுக்கு கஷ்டத்தைக் கொடுக்கிறது. ஆகவே இதை எல்லாவற்றையும் கவனித்து, இந்த இரண்டு மில்களும் நல்ல முறையில் வேலை செய்வதற்கு அவசரமாக நடவடிக்கை எடுக்கவேண்டுமென்று அரசாங்கத்தை பணிவுடன் கேட்டுக் கொள்கிறேன்.

* **The Hon. Sri R. VENKATARAMAN** : Sir, the management of the Kaleeswarar Mills suddenly closed down the mills on and from 13th August 1958, without any prior notice to the workers and without any payment of wages in lieu of retrenchment compensation, as required under the Industrial Disputes Act, 1947. This resulted in loss of employment to about 2,300 workers. In their notice, dated 13th August 1958, the management stated that the closure of the mill was due to factors such as heavy and continuous losses during the year 1957–58, accumulation 10-19 a.m.

[Sri R. Venkataraman] [5th September 1958

of stocks of cloth and yarn, demands of the cotton and stores merchants and other creditors for payment of monies due to them, lack of finance for purchase of raw materials and credit facilities for raising further finance for working the undertaking. Even before the closure, the affairs of the mill during the past few months have not been quite satisfactory due to a litigation between the shareholders and the former local agent. The wages of the workers were not regularly paid on the due dates from the month of March 1958 onwards. While the wages for March and April 1958 were paid as late as 19th April 1958 and 26th June 1958 respectively, the wages for the months of May to July 1958 remained unpaid despite the High Court's order directing the management to take steps for the prompt payment of wages to the workers on the due dates. On 19th August 1958 Government issued a Press Note explaining the situation.

As the workers were not paid wages for three months, action was taken under the Payment of Wages Act and some of the movable properties belonging to the management were attached, pending issue of final orders for recovery of the delayed wages due to the workers. Besides this, the question of prosecuting the management for contravention of the provisions of the Payment of Wages Act and the Industrial Disputes Act was also taken up. Meanwhile, to give relief to the workers, arrangements were made to disburse to the workers their provident fund accumulations. I wish to state that if the workers want their provident fund accumulations, the Government will make arrangements to pay a portion of the accumulations to them.

SRI M. KALYANASUNDARAM : Is it by way of an advance or is it final payment?

THE HON. SRI R. VENKATARAMAN : These things will have to be discussed and settled.

The Government of India have been apprised of the situation and requested to cause a full and complete investigation into the working of the mill under the Industries (Development and Regulations) Act, 1951. It is understood that an officer deputed by the Government of India visited the mills.

Meanwhile, the High Court passed orders on 22nd August 1958 appointing Sri N. Ramachandra Iyer, Sri P. S. Krishnaswamy Iyengar and Sri T. S. Sundaram Pillai, as a Council of Administrators for the Kaleeswarar Mills and instructed the administrators to give priority to the payment of wages to the workers. An agreement was reached between the Council of Administrators and the workers on 27th August 1958. According to this agreement, the arbitrators agreed to pay the workers, the arrears of wages, salary for the months of May, June and July 1958, on or before the 2nd September 1958. The parties also agreed to reopen the mills and resume work not later than 5th September 1958.

5th September 1958] [Sri R. Venkataraman]

It is understood that the Council of Administrators have not paid the wages to the workers with reference to the settlement, dated 27th August 1958 and that they are moving the High Court for adequate security for financing the amount required. The further developments are being closely watched by Government. The Government of India are also being apprised of the latest position and requested to take necessary action to meet any eventualities.

*Cambodia Mills, Limited, Coimbatore.*—The management of Cambodia Mills, Limited, Coimbatore, served notices of retrenchment to 251 badlies and discharged 96 temporary workers on 21st December 1957. The Commissioner of Labour held conciliation on 17th January 1958 and brought about a settlement. As per this settlement, the mill agreed to work three shifts of 7½ hours duration each subject to the condition that the Electricity Department accorded necessary relaxation of peak hour restrictions. The management subsequently informed the Commissioner of Labour that they could not give effect to the terms of settlement due to their inability to get relaxation of peak hour restrictions from the Electricity Department and that they have, therefore, decided to give effect to their original proposals, viz., closure of one shift and to retrench 251 badlies to avoid the total closure of the mills. Notice to 248 badlies were also issued. The workers went on a strike from 1st July 1958 protesting against the action of the management. The Government called for the parties and held a discussion at Madras on 4th August 1958. During the discussion, the Government suggested certain proposals to the parties for arriving at an amicable settlement. But the management informed the Government that the proposals suggested by the Government were not acceptable to them. After examining the question further in consultation with the Commissioner of Labour, the Government have referred the dispute for adjudication.

## V.—ANNOUNCEMENT BY THE HON. SPEAKER *RE* NOTICE OF AMENDMENTS.

MR. SPEAKER. I have fixed 5th September 1958 as the last date on which amendments for the following Bills have to be submitted to office :—

(1) The Madras District Development Councils Bill, 1958.
(2) The Madras City Municipal (Amendment) Bill, 1958.
(3) The Madras District Municipalities (Amendment) Bill, 1958.

We have decided to take up these Bills for consideration on 8th September 1958. Members tell me that they have not got copies of the Bills. I thought that the Bills were published in the *Fort St. George Gazette* and distributed to all Members. As a precaution, we give copies in the House. Members must have got copies. If they have not got, then I can think of something else. Unfortunately, I cannot extend the time for giving notice of amendments, because to-morrow and the day after are holidays. If Members do not give notice of amendments by this evening,